# ஈகையின் உயர்வு.

இது
யாழ்ப்பாணம்
சைவசித்தாந்த மகாசமாசத்தின்
பன்னிரண்டாவது வருஷாந்தக்கூட்டத்தில்
ஸ்ரீமான். ச. சபாரத்நமுதலியாரவர்கள்
(J. P., Deputy Fiscal, Jaffna.)
அக்கிராசனராயிருக்க

யாழ்ப்பாணத்து நல்லூர் உபய வேதாகமபண்டிதர்
ப்ர்ம்ஹஸ்ரீ. வே. கநகசபாபதிஐயர் அவர்கள் செய்த

## பிரசங்கம்.

சிங்கப்பூர் ஸ்ரீமான்களாகிய நகரத்தார்கள்
உபகரித்த பொருள்கொண்டு
யாழ்ப்பாணம் நாவலர்அச்சுக்கூடத்தில்
அச்சிடப்பட்டது.
1917.

# அவையடக்கம்.

முறையனைத்துந் தெரிந்துணரு மறிவா னோங்கி
　　முதன்மைபெறுஞ் சபையோரே மொழியு மெண்ணின்
நிறையனைத்துங் கொடுப்போரி னுயர்வும் மற்றை
　　நெறிமுறையிற் கொடாரிழிவும் நிரைத்து வந்த
துறையனைத்துந் தொகுத்ததொரு வியாச மென்னத்
　　தொன்முறையான் சொல்லுபிர சங்கத் துள்ள
குறையனைத்தும் பொறுத்துமனங் கொள்வ தோர்ந்தே
　　குணமனைத்துங் கொள்வதுங்கள் கடனு மன்றே.

☞ உலோபிகளைச் சுட்டி 28-ம் பக்கத்திற் சொல்லிய விநோத கதைகள் சமாசத்தில் விரித்துச் சொல்லப்பட்டன. விரிவஞ்சிக் கதைகளின் பெயர்கள்மாத்திரம் இங்கே குறிக்கப் பட்டன.

———*———

ப்ர்ம்ஹஸ்ரீ. ந. வே. கநகசபாபதிஐயர் அவர்கள்.
ஜனனம்: (10-3-1848.) பிலவங்கஹு மாசிமு௨ கக௨.

உ

சிவமயம்.

# ஈகையின் உயர்வு.



ஈகையாவது வறியராயேற்ருர்க்கு மாற்ருது கொடுத்தல். தன்னிடத்துள்ள யாதானும் ஒரு பொருளைப் பிறரொருவருக்குக் கொடுப்பது என்பாரும்; தருமவழிகளால் வந்தபொருள்களைச் சற்பாத்திரமாயுள்ளவர்க்கு அன்போடு கொடுத்தல் என்பாருமுளர். ஈகை, தானம், கொடை, தியாகம் என்பன ஒரு பொருட்சொற்கள். பாத்ரம். பா=பாபம். த்ரம்=நீக்குவது.

தருமவழிகளால் வந்தபொருள்களாவன:—வித்தை கற்பித்தல், வேளாண்மை, வாணிகம், இராஜசேவை, சிற்பம், முதலிய தொழில்களால் வரும் பொருள்களும், தாயகம் (தன்முன்னேயோர் தொட்டுவந்த பொருள்) இலாபம் (புதையல் முதலியவற்ருல் அடைந்தது) கிரயம் (பண்டமாற்று) ஜயம் (வெற்றியால் அடைந்தது) பிரயோகம் (கடன்கொடுத்து நியாயவட்டிவாங்குதலால் வருவது) முதலியனவற்ருல் வந்தபொருள்களும் பிறவுமாம். களவு, பொய்ச்சான்று, பொய்வழக்கு, பொய்ப்பத்திரம், விசுவாசகாதகம், பரிதானம், இராஜதுரோகம், அநீதவட்டி, மனமயக்கல், முதலியவற்ருல் வந்தபொருள்கள் முன்செய்த புண்ணியங்களையுங்கெடுத்து, இம்மையிலே தீராத வசையையும் சந்ததி நாசத்தையும் இராஜதண்டத்தையும், மறுமையிலே நரகத்துன்பத்தையும் பிறவித்துன்பத்தையும் விளைவிக்கும்.

"நட்டவர்க்கிடுக்கண்செய்து நம்பினர்க் கூன்மாருட்டத்
துட்படக்கவர்ந்து வேட்டோர்க்கிம்மியு முதவாராகி
வட்டியின் மிதப்பக்கூறிவாங்கியுஞ் சிலர் போலீட்டப்
பட்டதோ வறத்தாறீட்டும் நம் பொருள்படுமோ வென்ன"

என்னுஞ் செய்யுளையும் நோக்குக. பாபத்தால் வந்த பிறன்பொருளைக்கொடுத்தால், தருமம் பொருளுடையார்மேலும், பாபம் பொருள் கொடுத்தார்மேலும் நிற்கும்.

ஈகையின் வகைகள் இவை இவை என்று பலநூல்களிற் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுட் சில காட்டுகின்றும்.

தலைப்படுதானம், இடைப்படுதானம், கடைப்படுதானம் எனவும்,

உத்தமதானம், மத்திமதானம், அதமதானம் எனவும்,

சாத்விகதானம், இராஜசதானம், தாமசதானம் எனவும்,

இஷ்டம், பூர்த்தம், தத்தம் எனவும்,

ஆஜஸ்ரிகம், காம்யம், திவ்யம், நைமித்திகம் எனவும்,

தருமக்கொடை, அர்த்தக்கொடை, காமக்கொடை, வெட்கக்கொடை, ஆனந்தக்கொடை, பயக்கொடை, தாக்ஷண்யக் கொடை, எனவும்,

உரிமையிற் கொடுத்தல், வழக்கத்திற் கொடுத்தல், அச்சத்திற் கொடுத்தல், பாவனையிற் கொடுத்தல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற் கொடுத்தல். அவலத்திற் கொடுத்தல், உயர்ந்தோர்க்குக் கொடுத்தல், ஒப்போர்க்குக் கொடுத்தல், இரக்கத்திற் கொடுத்தல் எனவும் நூல்கள் பலவாறு கூறும்.

இவற்றுள்

1. தலைப்படுதானமாவது:—தருமவழியாற் றேடியபொருளை முக்குற்றமுமற்ற நற்றவத்தோரெழுந்தருளியிருக்கும் இடத்திற்சென்று, "அடியேனுடைய பொருளை ஏற்றருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்து அவர்களுக்குக் கொடுத்தல்.

இடைப்படுதானமாவது:—ஆதுலர், குருடர், முடவர், காப்பாரற்ற சிறுகுழந்தைகள், வியாதியாளர், வயோதிகர்கள் முதலியவர்களுக்குக் கொடுத்தல்.

கடைப்படுதானமாவது:—புகழ், ஆர்வம், கைமாறு, கண்ணோட்டம் முதலியவை காரணமாகக் கொடுத்தல்.

2. உத்தமதானமாவது:—கல்வி, அன்னம், கன்னிகை, வஸ்திரம், பசு, பூமி, பொன், யானை, குதிரை முதலியன கொடுத்தல்.

மத்திமதானமாவது:—வீடு, அதற்குரிய உபகரணங்கள், வியாதிகளுக்கு மருந்து முதலிய கொடுத்தல்.

அதமதானமாவது:—செருப்பு, குடை, விசிறி, பாத்திரம், விளக்கு முதலியன கொடுத்தல்.

3. சாத்விகதானம் ஆவது:—கொடுக்கத்தக்கது என்னுந் துணிவுடைய உணர்ச்சியால் கைமாறுவேண்டாமலே நல்ல இடத்தில் நல்லகாலத்தில் நல்லபாத்திரமாகிய தக்கோர்க்குக் கொடுப்பது.

இராஜச தானம் ஆவது:—கைமாறு கருதியும், தானப்பலனை விரும்பியும் கொடுப்பது.

தாமசதானம் ஆவது:—பொருந்தலுறாத பொருளைக் காலமிடம் பொருந்தாமலுற இழிந்தார்க்குச் சிரத்தையின்றிக் கொடுப்பது.

4. இஷ்டமாவது:—உலகமெல்லாம் வாழக்கருதிக் கடவுட் பராவுவது. தென்புலத்தார்ப் போற்றல், மந்திரம், யாகம் முதலியன இதிலடங்கும்.

பூர்த்தமாவது:—எல்லாவுயிர்களு மின்புறமாறு செய்யும் பொது நிலைத்தருமம். அன்னசத்திரம், தண்ணீர்ப்பந்தர், மருத்துவசாலை முதலியன இதில் அடங்கும். ஒருவரைக் குறியாது பலர்க்கும் பயன்பட நிலைக்கச்செய்வதாகலின் திருவள்ளுவர் இதனையே ஒப்புரவு என்பர்.

தத்தமாவது:—பசித்தோர்க்குணவளித்தல் முதலாக வறியோர்க்கீவது.

5. ஆஜஸ்ரிகம் ஆவது:—தோப்பு, ஏரி, குளங்கள், ஆவுரிஞ்சுகல், சுமைதாங்கி முதலியவற்றை அமைப்பது.

காம்யம் ஆவது:—தன்னுடைய மக்களுக்காகவும், ஒருவனை ஜயிப்பதற்காகவும், ஸ்திரீகள்பொருட்டும், ஐசுவரியவிஷயமாகவும் கொடுப்பது.

திவ்வியம் ஆவது:—யாகம் முதலியவற்றின் பொருட்டுக் கொடுப்பது.

நைமித்திகம் ஆவது:—இன்னகாலத்தில், இன்னகிரியையில், இதன்பொருட்டுக் கொடுப்பதென்று காலம், கிரியை, பலன் இவைகளை விரும்பிக்கொடுப்பது. காசி, கயை முதலிய க்ஷேத்திரங்களைச் சுட்டிக்கொடுப்பதும் இதனுள் அடங்கும்.

6. தருமக்கொடை ஆவது:—பிரதிபலன்விரும்பாது சற்பாத்திருக்குக் கொடுப்பது.

அர்த்தக்கொடை ஆவது:—பிரதிபலன் விரும்பிக்கொடுப்பது.

காமக்கொடை ஆவது:—அந்நியஸ்திரீ, சூதுமுதலியவைகளின் பொருட்டுத் தகாதவர்களுக்குக் கொடுப்பது.

வெட்கக்கொடை ஆவது:—சபையில் புகழப்படுவதனால் வெட்கப்பட்டுக் கொடுப்பது.

ஆனந்தக்கொடை ஆவது:—இஷ்டமான வஸ்துக்களைச் சந்தோஷத்தினாற் சொடுப்பது.

பயக்கொடை ஆவது:—ஒருவனுடைய கோபத்திற்குப் பயந்தேனும், ஆக்கினைக்குத்தப்புதற்கேனும் கொடுப்பது.

தாக்ஷண்யக்கொடை ஆவது:—பாந்தவ்யம், அதிகாரம், டம்பம், வெகுகிருதவேஷம் முதலியவை காரணமாகக்கொடுப்பது.

7. உரிமையிற் கொடுத்தல் ஆவது:—மகனுக்கு அரசு கொடுத்தல் போல்வது.

வழக்கத்திற் கொடுத்தல் ஆவது:—மருமகனுக்கு மகளைக் கொடுத்தல் போல்வது.

அச்சத்திற் கொடுத்தல் ஆவது:—அரசருக்குத் திறை கொத்தல் போல்வது.

பாவனையிற் கொடுத்தல் ஆவது:—தந்தை தாய்க்குத் திதி கொடுத்தல் போல்வது.

உவகையிற் கொடுத்தல் ஆவது:—வித்துவானுக்குப்பரிசு கொடுத்தல் போல்வது.

வெகுளியிற் கொடுத்தல் ஆவது:—அரசன் கள்ளனுக்குக் கசை அடி கொடுத்தல் போல்வது.

அவலத்திற் கொடுத்தல் ஆவது:—வாய்க்கரிசியிடுதல்போல்வது.

உயர்ந்தோர்க்குக் கொடுத்தல் ஆவது:—பெருமுடிவேந்தர்க்குக் குறுநிலமன்னர் குதிரைகொடுத்ல் போல்வது.

ஒப்போர்க்குக் கொடுத்தல் ஆவது:—சேரன் சோழனுக்கு விருந்து கொடுத்தல் போல்வது.

இரக்கத்திற் கொடுத்தல் ஆவது:—வறியார்க்குப்பொன் கொடுத்தல் போல்வது.

இன்னும் கொடையின் பேதங்கள் பல இருக்கின்றன. அவை ஆலயம், திருமடம் முதலிய திருப்பணிகளுக்குப் பொருளீதல், அவைகட்கு வேண்டிய நிபந்த திரவியங்களீதல், கடவுட் பத்தியுடையோர்களுக்கு அவர்கள் விரும்பியவை தன்னிடத்துள்ளனவாயின் இல்லையென்னுது கொடுத்தல் முதலியன. இவற்றின்றன்மைகளைச் சைவவைஷ்ணவ ஆகமங்களிலும் புராணங்களிலுங் காண்க. இங்கே விரிக்கிற் பெருகும்.

இங்கே நாம் கூறியதானங்களுள், கோதானம், அன்னதானம், கன்னிகாதானம் என்னும் இவை மிக உத்தமதானங்களாம். வித்தியாதானம் மிகமிக உத்தமோத்தமதானமாம். இவைகளைச்சுட்டிச் சிறிதுபேசி அப்பாற் போகின்றோம்.

கோதானம்:—பசுவானது யாகாதிகளின் பொருட்டும், சிவ பூசையின்பொருட்டும் பாற்கடலில் நின்றும் பிறந்தது. தன தங்கங்களில் பலதேவர்கள், முனிவர்கள், மலைகள், புண்ணியதீர்த்தங்கள், ஔஷதிகள், வசிக்கப்பெற்றது. இதன் மகிமைகள் ஸ்காந்தம், பெரியபுராணம், மஹாபாரதம், சிவதருமோத்தரம் முதலிய நூல்களில் விரித்துக்கூறப்பட்டன. நிரியாணகாலத்தில் இக்கோதானஞ்செய்தோரே, யமபுரத்துக்குச் செல்லும் வழியிலுள்ளதும், நீரின்றிச் சீ இரத்தம்நிறைந்ததும், நூறுயோசனை நீளமகலமுள்ளதும், விஷஜந்துக்கள் மலிந்ததுமாயுள்ள வைதரணிநதியை அநயாசமாகக்கடந்து செல்வர். இக்கோதானம், கநககாமதேனுதானம், குடதேனுதானம், இரத்நதேனுதானம், முதலாகப் பலவகைப்படும். அவற்றுள், உபயகோமுகிதானமே மிகச்சிறந்தது.

உபயகோமுகி தானம் ஆவது:—பசு, கன்றீனும்போது கன்றின் பாதித்தேகம் தாயின் வயிற்றிலும், மற்றைப்பாதி வெளியிலும் இருக்கும்போது பசுவினைப் பொன் வெள்ளி ஆபரணங்களால் அலங்கரித்துத் தக்ஷிணையுடனே நல்லொழுக்கமுள்ள வேதவித்துக்களாகிய பிராமணர்களுக்குக் கொடுத்தல். போலிப் பிராமணருக்குக் கொடுத்தால் சாம்பரிற்செய்த ஓமம்போலப் பிரயோசனப்படாதாம். சௌநகர் என்னும் முனிவருக்கு அவருடைய நல்லொழுக்கம் தபோமகிமைகளைக்கண்டு செம்படவர்கள் அவரைப்பிரார்த்தித்து அவருக்கு ஒரு கோதானஞ் செய்ததனால் சொர்க்கலோகமடைந்தின்புற்ற சரித்திரம் பாரதத்திற்காண்க.

"தாவில்வெண்பசுப்,
பூவிற்றேவர்க்கு,
மேவநல்கினேன்,
சீவன்முத்தனே" (சூதசங்கிதை)

அன்னதானம் ஆவது:—பசியுடையோர்க்கு உணவுகொடுத்தலாம். "ஆயிரம் யானைகள், ஆயிரம் குதிரைகள், கோடிபசுக்கள், அனேகம் பொற்பாத்திரங்கள், மிக்க பரப்புடைய பூமி, கோடிகன்னிகைகள் இவைகளைத்தானஞ்செய்பினும் அன்னதா

னத்துக்குச் சமமாகாது" "அன்னுதகத்துக்குச் சமானமான தானமில்லை" (நீதிசாஸ்திரம்). அன்னதானஞ் செய்தோரின் மகிமைகளை பாரதத்திலுள்ள நகுலோபாக்கியானத்திலும் சைவவைஷ்ணவ புராணங்களிலும் காண்க.

கன்னிகாதானம் ஆவது:—ஒருவன் தான் பெற்ற பெண்ணை கல்வி, அறிவு, ஒழுக்கம், ஆண்மை முதலியவற்றிற் சிறந்த தன் வருணத்தவனுகிய பிரமசாரிக்குப் பொருளோடு விதிப்படி கொடுத்தல். இது மஹாதானம் எனவும் பெயர் பெறும். வரனிடத்திற் பொருள் வாங்கிக்கொண்டு பெண்ணைக்கொடுத்தல் மிகப்பாவமாம். சாலங்கார கன்னிகா தானஞ்செய்பவன் தனது இருபத்தொரு தலைமுறையிலுள்ளவர்களையும் நல்லுலகஞ்சேர்ப்பான்.

"இலகுகன்னிகை
குலவனல்கினே
னிலவிடுஞ்சிவ
வுலகநண்ணுவான்." (சூதசங்கிதை)

நாம் முன்னே கூறிய எல்லாத்தானங்களுக்கு மூலமாய் அவ்வெல்லாத்தருமங்களையுந் தன்னுளடக்கி, அவ்வெல்லாத் தருமங்கட்கும் மேற்பட்டு விளங்குமியல்பினையுடைய பரமதானம் வித்தியாதானமேயாம். இது வேதாகம நூற்றுணிபு. இக்கருத்துக் கல்விஅறிவுடையராகிய சிலருக்குமாத்திரமன்றி மற்றவர்களுக்கு விளங்காமைபற்றி அவைகளுக்குப் பொருளுபகரிக்க உடன்படுவோர் தற்காலத்தில் அரியராகின்றுர்கள். சிவாலயம் முதலிய ஆலயத்திருப்பணிகள் பரமதருமமென்பது கல்வி அறிவுடையவரும், கல்வி அறிவில்லாதவருமாகிய எல்லாருக்கும் விளங்குதல் பற்றி அவைகளுக்குப் பொருளுபகரிக்க உடன்படுவோர் பலராகின்றுர்கள். அவர்கள் ஊன்றி விசாரிப்பார்களாயின் ஆலயத்திருப்பணிக்கும் நாம் கூறிய கல்விஅறிவு ஆவசியம் வேண்டுமென்று இனிதுணர்வார்கள். என்னை? சிவாலயம் முதலிய ஆலயத்திருப்பணிகள் செய்யுமுறையும், நிபந்தங்களமைக்கும் வகையும், நித்திய நைமித்திகங்கள் நடத்தும் நிரையும், அவ

ற்றூற்பெறப்படும் இம்மை மறுமைப்பேறுகளும், அவற்றை விதிப்படி நடத்தாவிடில் இம்மையிலும் மறுமையிலும் வரும் ஏதங்களும் செவ்வே அறிவுறுத்துவது அதுவன்றோ? வித்யாதானம் விசேஷமென்பதனை "ஸர்வேஷாமேவதாநாநாம் வித்யாதாநம் பரஸ்மிர்தம் வித்யாயா: ப்ராணிநாமுக்தி தஸ்மாத்தத்தாநமுத்தமம்" (சூதசங்கிதை) "அந்நதாநஸமம் நாஸ்தி வித்யாதாநம் தத: பரம்! அந்நந்துக்ஷணிகம் ஜீர்ணம் யாவஜ்ஜீவந்து வித்யயா"

"மானவர்க்கறிவினைவயக்கியின்பரு
மானமார்முத்தியில் வைக்குமீர்மையால்
தானமெவ்வகையுளுந் தக்கவித்தியா,
தானமே சிறந்தது சாற்றுங்காலையே" (சூதசங்கிதை) என்பனவற்றானறிக.

கடவுளுடைய லக்ஷணங்களை யுள்ளபடியறிந்து வழிபட்டு உய்தற்குக் கல்விகேள்விகளே வேண்டுமென்பதை நோக்கியே உண்மை நாயன்மார்களும் "கல்லார் நெஞ்சினில்லா வீசன்" கற்றல் கேட்டலுடையார் பெரியார் கழல் கையாற்றொழுதேத்த" "கல்லாதார் காண்டற் கரியானை" "கற்றவர் தொழுதேத்துஞ் சீர்க்கறையூரிற் பாண்டிக்கொடுமுடி நற்றவா" "கற்றவர் விழுங்குங் கற்பகக்கனியைக் கரையிலாக்கருணை மா கடலை, மற்றவரறியா மாணிக்கமலையை" கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண்ணாதே" என்று திருவாய்மலர்ந்தருளினார்கள்.

கல்வி, வைதிகக்கல்வி, லௌகிகக்கல்வி என இருவகைப்படும். முன்னையது மறுமைக்கேற்றது. பின்னையது இம்மைக்கேற்றது. பொதுவகையாக வித்தியாதானஞ் சிறந்ததாயினும் வைதிக வித்தியாதானமே மிகச்சிறந்ததாம். முற்காலத்திலே வைதிகக் கல்விப்பயிற்சி மிகப் பிரபலமாகவிருந்தது. அக்காலத்தில் இளைஞர் குருகுலவாசஞ்செய்து வைதிகக் கல்விப்பயிற்சியைமுற்றுவித்துப் பின் லௌகிகக்கல்விகற்றபின்பே விவாகஞ்செய்துவந்தார்களென்பது பாரத இராமாயணாதி இதிகாசங்களிற்பரக்கக்காணலாம். அம்மட்டோ சரீரப்பயிற்சி தேசாடனம் முதலியன

வும். செய்தார்களென்பதும் காணலாம். இக்காலத்தில் லௌகிகக் கல்வியையே மிகவிரும்பிக் கற்கின்றார்கள். வைதிகக்கல்வியின்றிக் கற்கும் லௌகிகக்கல்வி ஒரு சமயப்பற்றுமின்றி நிரீச்சுரவாதியாக்கிவிடுமென்பது சில மேதாவிகள் கருத்து. தற்காலத்துள்ள வித்தியாசாலைகளில் வைதிகக்கல்வி கற்பிப்பதில்லை என்றும் அவசியம் கற்பிக்கவேண்டுமென்றும் பத்திரிகைகளும் முறையிடுவதே அமையுஞ்சான்று. வைதிகவித்யாபிவிர்த்தி செய்தற்குக் கடமைபூண்ட சைவஸ்மார்த்த வைஷ்ணவ மத்துவாதி மடாதிபதிகள் நினைப்பார்களாயின் வைதிகக்கல்வி மிகச்செழித்தோங்குமென்பது நிச்சயம்.

தற்காலத்தில் வைதிகக்கல்வி பெரும்பாலும் நாட்டுக்கோட்டை நகரத்தார்களாற் பரிபாலிக்கப்பட்டு வருகின்றது. அவர்கள் பலவிசேஷ க்ஷேத்திரங்களில் வேதபாடசாலைகள் ஸ்தாபித்துப் பிரமசாரிகளுக்கு அன்னவஸ்திர முதலியன கொடுத்துவருகின்றார்கள். அப்பாடசாலைகளில் இருக்கு, எசுர், சாமம் என்னும் வேதங்களும் சிலபாடசாலைகளில் வியாகரணம், காவியம், ஆகமம் என்னும் சாஸ்திரங்களும் கற்பிக்கப்படுகின்றன. சில இடங்களில் தேவாரபாடசாலைகளும் வைக்கப்பட்டிருக்கின்றன. சென்ற சார்வரிஷு நான் இந்தியாவுக்குப்போனபொழுது நகரத்தார்களின் வேதசாஸ்திரப்பாடசாலைகள் 53 இருப்பதாக அறிந்தேன். அவற்றில் 1000 க்கு மேற்பட்ட பிரமசாரிகள் அத்தியயனஞ் செய்கின்றார்கள். இப்போ இன்னும் பலபாடசாலைகள் கூடியிருக்கலாமென்று நினைக்கின்றேன். நகரத்தார்களுக்கு இவ் வைதிக வித்தியாதானத்தினால் அளவில்லாதபுகழும் புண்ணியமும் க்ஷேமமும் உண்டாமென்பது நிச்சயம். இனி அமையும்.

அறம் என்ற சொல்லிற்கு ஔவையாரின் கருத்து ஈதல் என்பதனை அவருடைய "ஈதலறம்" என்னும் வெண்பாவிற் காண்க. கலியுகத்தில் கொடையே முக்கிய தருமம் என்று ஸ்மிருதி கூறிற்று. (மனு. 1-86) இங்ஙனம் கொடுத்தல் என்னுங்குணம் பழக்கத்தால் வருவதல்லப் பிறவிக்குணமேயாம். கொடையும் பிறவிக்குணம்" என்னும் ஔவையார் வாக்கிற்காண்க,

"கொடையுளுமொருவன்" என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளை யும் நோக்குக. "ஈகை, இன்சொல், தைரியம், பகுத்தறிவு இந் நான்கும் பிறவிக்குணம் (கற்றுக்கொள்வன அல்ல) [நீதிசாஸ் திரம்] கொடுக்குந் தன்மை பிறவிக்குணமேயன்றிக் கற்றுக்கொ ள்வது அல்ல என்பதற்கு ஒரு சரித்திரம் சொல்லுகின்றோம். முன்னொருகாலத்தில் துரியோதனன் கர்ணனை எல்லாரும் தாதா எனப்புகழக்கேட்டுத் தானும் அவ்வாறு புகழப்படவிரும்பி, வரும் யாசகர்களுக்கு இல்லையென்னாது விரும்பியவற்றைக் கொ டுக்கத்தொடங்கினான். இதனை அறிந்த கிருஷ்ணமூர்த்தி தான் தர்மசம்ஸ்தாபனார்த்தம் பூமியில் அவதாரஞ் செய்தவராதலால் கொடை பிறவிக்குணமென்பதனை உலகத்தார்க்குக் காட்டு மாறு ஒருநாள் மிகவயசுசென்ற கிழப்பிராமணவடிவங்கொண்டு துரியோதனனிடஞ் சென்றார். துரியோதனன் அவரைவணங்கி வந்த ஏதுக்கேட்கப் பிராமணர் "அரசனே! நான் இன்னுஞ்சில தினத்தில் ஒரு யாகஞ்செய்யப்போகின்றேன் அதற்கு இத்தனை வண்டிநிறைந்த சந்தனக்கட்டை வேண்டும் அதை உத்தேசித் தே இங்குவந்தேனென்றார். துரியோதனன் சுவாமீ! அவ்வா றே தருகின்றேன் பெற்றுக்கொள்ளுங்கள் என்றான். அதற்கு பிராமணர் யாகாரம்பத்திற்குமுதனாள் வந்து பெற்றுக்கொள்வே னென்று சொல்லிச் சென்றார். பிராமணர்சென்றது தான் தா மசம் அன்றுமுதல் விடாமழை பொழிந்துகொண்டேயிருந்தது. ஒருநாள் அம்மழையில் நனைந்து குளிரால் நடுங்கிக்கொண்டு அக்கிழப்பிராமணர் துரியோதனனை வந்துகண்டு "அரசனே! நாளை யாகாரம்பஞ்செய்யப்போகின்றேன் தாங்கள் வாக்குத் தத்தஞ் செய்தபடி சந்தனக்கட்டைகளைத் தரும்படி கேட்கின் றேன் என்றார். அப்போ துரியோதனன் பிராமணரைநோக்கி "சுவாமீ! நான் தங்களுக்கு வாக்குத்தத்தஞ்செய்ததை இல்லை என்னவில்லை. சந்தர்ப்பப் பிசகாயிருக்கின்றது. மழையோ வி டாது பொழிகின்றது. ஆதலால் யாகாரம்பத்தைப் பின்னொரு நாளைக்கு வைத்துக்கொள்ளும் என்று சொல்லிவிட்டான். பிரா மணர் யாது செய்வார். அம்மழையில் நனைந்துகொண்டே கர் ணனுடைய தானவாசலை அடைந்தார். கர்ணன் பிராமணரைக் கண்டு எதிர்கொண்டு வணங்கி ஆசனத்திருத்திப் பூசித்து, சுவா

யீ! எழுந்தருளியதென்னை என்றுகேட்க, பிராமணர் அரசனே! ஒரு யாகஞ்செய்யப்போகின்றேன் அதற்கு இத்தனைவண்டி சந்தனக்கட்டைவேண்டும் யாகத்தொடக்கமும் நாளைக்கே என்றார். உடனே கர்ணன் அப்படியே தருகின்றேன் என்றுசொல்லி, பணிவிடைக்காரர்களினால் தனதுமண்டபங்களிலுள்ள சந்தன மரத்தாலாய கதவுகள், நிலைகள், உத்திரங்கள், தூண்கள் முதலியவைகளைப்பெயர்த்தெடுத்துப் பிராமணர் விரும்பிய அளவு வண்டிகளிலேற்றிப் பிராமணரைத்திருப்திசெய்து அவருடைய ஆசிர்வாதங்களைப் பெற்றான்.

(இச்சரித்திரம் ஒருவர்சொல்லக்கேட்டது).

தினகரராஜன் புத்திரனாகிய சோமன் தெருவில் விளையாடிக் கொண்டிருக்கும்போது ஒரு வித்துவான் கைகொட்டியழைக்க இக்குழந்தைவித்துவான் தன்னிடம் யாசிக்கிறதாகவெண்ணித் தலையில் அணிந்திருந்த ரத்நச்சுட்டியை பிடுங்கிக்கொடுத்தான். "கையைவிரித்தழைக்கக்கண்டு குழந்தை சோமன்செய்ய சுட்டியீந்தான் தினகரா" எனத்தினகரவெண்பாவிற் சுட்டப்பட்டவன் இவனே. இச்சரித்திரமும் கொடை பிறவிக்குணம் என்னும் நம் வாக்கை நிறுத்தும்.

தானங்களெல்லாம் சற்பாத்திரத்திலே செய்தல்வேண்டும். அவ்வாறுசெய்யின் ஒன்றுபலவாக அபிவிருத்தியாம் என்பது உண்மை நூற்றுணிபு.

"ஞானமுன்னிய நான்மறையாளர்கைத்
தானமென்னத் தழைத்ததுநீத்தமே"

எனவும்,

"படநாகந்தோலுரித்தாற்போற்றுறந்து கண்டவர்
மெய் பனிப்பநோற்றிட்,
டுடனுகை வைம்பொறியும்வென்றார்க் கீதருனமாகும்"

எனவும் வருவனவற்றானறிக.

"பரிந்தகொலைப்பாதகன் கைக்கத்தியேனும்,
பரிசனவேதியைப்பரிக்கப் பொன்னும் என்பதும்
இழிந்தமாந்தர் கைப்பொருள்களு மிகபாத்தாசை,
கழிந்தயோகியர் கைப்படிற்றாயவாய்க்களங்கம் ஒழியும்,
என்பதும் சாஸ்திரசம்மதம். இது நிற்க.

"நாம் முன்னே கூறிய கொடைகளெல்லாவற்றிற்கும் அன்பு சிரத்தை, முகமலர்ச்சி, இன்னுரை முதலிய நற்குணங்கள் இன்றி அமையாதன என்பது ஸ்மிருதிகளின் சம்மதம்.

"சிறிதாகவேனும் பெரிதாகவேனும் இருப்பது தானத்துக்கு நன்மைசெய்வதல்ல, சிரத்தை பத்தி இவைகளே கொடைக்கு அவசியம் வேண்டியன."

"(உடலைச்) சுத்தஞ்செய்துகொள்ளுதலும் (மனதைச்) சுத்தஞ்செய்துகொள்ளுதலும், இரப்பவரைக்கண்டவிடத்து அன்புடனிருத்தலும், இரப்பவரை நன்குமதித்து இனியவைகளைக்கூறி உபசரித்தலும், அழுக்காறு அற்றிருத்தலும் இவையெல்லாம் கொடைவிஷயத்தில் சிரத்தை" என்றுகூறப்பட்டன

"பெரியதானமேயாயினும் சிரத்தையின்றிக் கொடுத்தால் அதுபலன் அற்றதாம்"

"சிரத்தையோடு கொடுப்பது என்றுங் கெடாததாகமுடியும். (ஸமிருதி).

கொடுக்குங்கால் அதைப்பற்றிக்கர்வம் அடையாதிருத்தல் வேண்டும்; எவ்வளவு சிறந்தகொடைகொடுப்பினும் சிறிது அசிரத்தை இருக்குமாயின் அது நிஷ்பிரயோசனமாகும்; யாசிப்போர் நோக்கம் அறிந்து கொடுத்தல்வேண்டும்; கொடுக்கும்போது எவ்வளவு கஷ்டங்கள் வந்தபோதிலும் மனங்கலங்காது பொறுமையோடு தைரியமாகக் கொடுத்தல்வேண்டும். இவை ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு சரித்திரமுள. இங்கே கூறில் விரியும். மகாபாரதத்துட்காண்க. இனி கொடை மடமுடையோரைச்சுட்டிச் சிறிதுபேசுகின்றேம்.

ஈதலுக்குரிய சற்பாத்திரங்களின் இலக்ஷணங்களும், அப்பாத்திரங்களுக்கே ஈதல்வேண்டும் என்பதும், அச்சற்பாத்திரத்தில் ஈந்து உத்தம லோகங்களைப்பெற்று இன்புற்றோரின் சரித்திரங்களும், பின் அசற்பாத்திரங்களின் இலக்ஷணங்களும், அப்பாத்திரங்களுக்கு மறந்தேயும் ஈதல் கூடாதென்பதும், அவ்வசற்பாத்திரங்களுக்கீந்து அதோகதியடைந்து துன்புற்றோரின் சரித்திர

ங்களும் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருக்கின்றனவே. அவ்வாருகப் பாத்திராபாத்திரம் நோக்காது வரையாது கொடுத்தல் கூடுமோ? எனில் கூறுதும். ஒருவருக்கு ஒருபொருளிடத்துள்ளதாகிய ஆசை நீங்கினலன்றி அப்பொருளைக் கைவிடுதல் கூடாது. ஒருவனுக்கு ஈகைக்குணம் மேலிடுமாயின் அவன் மனம்முழுதும் அவ்வீகைக்குணமே நிலையுறுமன்றிப் பொருட் பற்றுமுற்றும் அற்றுப்போம். இவ்வாறு பற்றற்றவனே ஞானி "அற்றது பற்றெனினுற்றது வீடு" என்பது பெரியோர் வாக்கு. அவன்வீடு பேறடைதல் நிச்சயம். அவ்வாருமென்பதற்கு நாயன்மார் ஆழ்வாராதியோர் முதலிய பரமபத்தர்களுடைய சரித்திரங்களே அமையும் சான்று.

யுத்தகளத்திற் போர்புரியும் வீரனுக்கு எதிர்ப்பட்டு நிற்பவர், பிதாவாயினும், சகோதரனுயினும், குருவாயினும், பிராமணுயினும், பொருதுகொல்வதன்றி அங்கே பிதிர்கத்தி, சகோதரகத்தி, குருகத்தி, பிரமகத்தி என்னும் பாவங்கள் வருமென்று தோன்ருதவாறுபோலத், தேகி என்பார்க்கு நாஸ்தியென்னுது ஈதல்வேண்டுமென்ற உணர்ச்சிமுறுகி மேன்மேலுங்கிளைவிட்டெழுந்து தளிர்த்தமனத்தினர் இரப்பானைக்காண்டலும் ஈவது தோன்றுமேயன்றி ஏற்பானது குணதோஷ வாராய்ச்சியில் மனஞ்செல்லாதாம். இங்ஙனமாகக் கொடுக்குங் குறிப்பல்லது பிறிதொன்றுங்கொள்ளா நிலையவாயகொடையே "கொடைவீரம் அல்லது வீரக்கொடை என்று கூறத்தகும். கொடையினிடமாகவும் வீரம் நிகழும் என்பதனை "கல்வி தறுகண் ணிசைமை கொடையெனச் சொல்லப்பட்ட பெருமித நான்கே" என்ருர் ஆசிரியர் தொல்காப்பியனுர். கொடையென்பது உயிருமுடம்பும் உறுப்புமுதலிய வெல்லாப்பொருளுங் கொடுத்தல் என்பது அதனுரை. ஔவையார் "இட்டார் பெரியோ ரிடாதாரிழி குலத்தோர்" என்ருர். அதற்கேற்றபடி திருவள்ளுவரும்

"இலனென்னுமெவ்வமுரையாமையீதல்
குலனுடையான்கண்ணேயுள"

இதற்குப் பரிமேலழகர் கருத்து:

இலனென்னும்=யான் வறியானென்று இரப்பான்சொல்லும், எவ்வம்=இழிவரவை, உரையாமை=தான் பிறர்கண்சொல்லாமையும், ஈதல்=அதனைத் தன்கண்சொன்னூர்க்கு மாற்ருதீதலும், உள=உளவாவன, குலனுடையான்கண்ணே=குடிப்பிறந்தான் கண்ணே, (இக்கருத்தை "இரப்பவனிலனென்ருர வியம்பிய எவ்வஞ்சொல்லென் றிரப்பினும் பிறர்பாற்கூருதிரக்கமோடீ தன்மைந்தா" என்று விநாயகபுராணமுடையார் கூறினர்.)

"இலனென்னுமெவ்வமுரையாமை யீதல்" என்னும் பாகம் பலபொருள்படும். எங்ஙனமெனின். "இல-தல்" நானிப்போ இல்லாதவனுயிருக்கிறேனென்று உலோபிகளைப்போ லுரையாமல் எற்றகைமாருமை யென்னும் தாம்வரையாது ஆற்ருதார்க்கு ஈவதாம் ஆண்கடன். ("இரப்பவன் வாளாதேக விலனென்னு மெவ்வங் கூருதிரப்பினை யிரப்பல் நன்ரும்" என்னும் மேலைப்புராணமுடையார் கருத்தும் அது.)

இல-தல். யான் இல்லேன் என்னும் இரக்கவார்த்தையை யாசகன் சொல்லுதற்குமுன்னரே அவன் குறிப்பறிந்து கொடுத்தல். ("குறிப்பறிந்தீதலே கொடை" என்னும் நைடதச்செய்யுளும், "தொல்லை இரவாமலீய்ந்த விறைவர்போல் நீயும் கரவாமலீகைகடன், என்னும் புறப்பொருள் வெண்பாவும் உய்த்துணரத்தக்கன.)

இல-தல். இலனென்னு மிழிமொழியை இரப்பவன் தன்னிடந் தானம் வாங்கினபின்பு வேருெருவனிடம்போய்ப் புகலாவண்ணம் அவனது வறுமை நீங்கவும் அவனுக்குச் செல்வம் நிரம்பவும் திருப்தியுண்டாகக்கொடுத்தல். இம்மூவுரைகளும் திருவள்ளுவருக்குரை எழுதியமற்றை ஆசிரியர் கருத்து என்பது பரிமேலழகர் குறிப்புரையிற்காண்க.

இன்னும் இல+தல். யான் மிகவுமேழை என்ற இழிவரவை யாசகன் கூறியதும், அவனது வறுமைநீக்கி அவனுமொரு கொடையாளியாகும்படியான மிகுந்த பொருளீதல் என்றும்; பலருடைய பழமொழிக்கஞ்சியேனும் யாசித்துவந்தவர்களுக்கு

இல்லையென்னுமற்கொடுத்தல் என்றும்; தன்னிடம் வந்தயாசக னை இலனென்று ஏழனஞ்செய்யாது ஈதல் என்றும் வேறுபல பொருள் கூறுவாருமுளர்.

இங்கே "குலனுடையான் கண்ணே" என்பதனை

"நல்லகுடிப்பிறந்தார் நல்கூர்ந்தாராணு
மில்லையெனமாட்டார்"

என்பது வலியுறுத்துகின்றது.

இதற்கு ஒரு சரித்திரம் சொல்லுகின்றோம்.

சூரியகுலத்திலே பிறந்த ரகுமகாராஜன் தனது எல்லாப் பொருள்களையும் தக்ஷிணையாக இருத்து விக்குமுதலியோர்களுக்குக் கொடுத்து விசுவஜித் என்ற யாகத்தைச்செய்து செல்வம் முழுதும் வற்றியிருந்தகாலத்தில், வரதந்துமுனிவரின் சிஷ்யராகிய கௌத்ஸர் என்னும் பிராமணப்பிரமசாரி, அவ்வரசனிடம் குருதக்ஷிணைக்காக வந்தார். அரசன் எதிர்கொண்டு மட்பாத்திரத்தில் அர்க்கியாதி கொடுத்த குறிப்பால் அரசன் யாகஞ்செய்ததால் வறுமையடைந்தனனென்றுணர்ந்து திரும்புகையில் அரசன் வேதியரை வந்தகாரியம் வினவினன். பிரமசாரி நான் குருதக்ஷிணைக்காகப் பதினான்குகோடிபொன் யாசிக்கவந்தேன் நீர் மட்பாத்திரத்தால் ஜலம் தந்த நிலைமையைக்கண்டு காலமல்லாத காலத்தில் தங்களிடத்தில் யாசிக்கவந்தேனென்று துன்புறுகின்றேன். குருதக்ஷிணையோ மிகுந்ததொகையாதலால் இந்தச்சமையத்தில் தங்களைவருத்த எனக்கு இஷ்டமில்லை. ஆதலால் வேறொரு அரசனிடஞ்செல்கின்றேனென்று புறப்படச்சித்தமானார். அதனை அறிந்த அரசன் பிராமணரைநோக்கி "ஐயா! வேதங்களின்கரையைக்கண்ட ஒரு பிரமசாரி குருதக்ஷிணையின் பொருட்டு யாசகராக ரகுவினுடைய சமீபத்தில் வந்து அங்கே தனது மனோபீஷ்டத்தை யடையாமல் வேறொருகொடையாளியை அடைந்தார் என்ற அபவாதம் புதிதாக எனக்குச் சம்பவிக்க வேண்டாம்பொருள் தருகின்றேன் தாங்கள் அக்கினிசாலையில் வீற்றிருங்கள் என்று சொல்லி, நிதிக்கிறைவனாகிய குபேரனை ஒரு சிற்றரசனென்று கருதி அவனைத் தமது வல்லமையால்வெ

ன்று பொருள் பெறவிரும்பி குபேரனுடைய பட்டணத்துப்போக ஆயத்தமானான். இதனை அறிந்த குபேரன் ரகுராஜனுடைய பொக்கிஷசாலையின் நடுவில் பொன்மழைபொழிந்து நிரப்பிவிட்டான். இதனைத் திரவியசாலை அதிகாரிகளால் அறிந்த அரசன் அப்பொன் முழுவதையும் கௌத்ஸருக்குக் கொடுத்துவிட்டான்.

"தெண்கடல் வளாகம் பொதுமையின்றி,
வெண்குடைநிழற்றிய ஒருமையோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந்துஞ்சான்,
கடுமாப் பார்க்குங் கல்லாவொருவற்கு,
உண்பன நாழி யுடுப்பனவிரண்டே
பிறவுமெல்லாமோ ரொக்கும்மே,
செல்வத்துப் பயனே யீதல்." (புறநானூறு)

கொடையே எல்லாவற்றினும் விசேஷமுடையதென்று காஞ்சிப்புராணங் கூறிற்று. உபநிஷத்தும் இதனை வலியுறுத்தியது.

இக்கொடையினாலே பெரும்புகழ்பெற்று வள்ளல் என்று வித்துவான்களால் இனிது பாடப்பெற்றுப் பூதவுடம்பழிந்தும் புகழுடம்பழியாது என்றும் நிலைத்திருப்போர் எண்ணிறந்தோர். அவர்களை இவரிவரென்று கூறப்புகுந்தால் வரைவின்றிப் பெருகுமாதலிற் சிலரைமாத்திரம் கூறிப்போகின்றோம்.

**பேகன்:**—ஆவியர்குடியிற்பிறந்தவன், மலைநாட்டரசன், மயில்குளிர்ந்து கூவியதென்று ஆடை அளித்தவன்

"முடா அ பொராவாகுதலறிந்தும்,
படா அ மஞ்ஞைக்கீய்ந்த வெங்கோ,
கடா அ யானைக்கலிமான்பேக"

எனவும்

"மடத்தகைமாமயில் பனிக்குமென்றருளிப்
படாமீத்தகெடா அ நல்லிசைக்,
கடாயானைக்கலிமான் பேக"

எனவும் பாடப்பெற்றவன்.

பாரி:—வேளிர்குலத் தலைவன். பெருங்கொடை வள்ளல். இவனொருகாற் றேரூர்ந்து காட்டுவழியே சென்றபோது அங்கே முல்லைக்கொடியொன்று படர்தற்குக் கொழுகொம்பில்லாது தளர்ந்து நடுங்குவதுகண்டு அவ்வோரறிவுயிரிடத்து முண்டாகிய பேரருளால் அக்கொடியினிது படரும்படி தானேறிச்சென்ற பொற்றேரை அதன் பக்கத்தே நிறுத்திவிட்டுக் கால்வருந்த நடந்துசென்றவன். சுந்தரமூர்த்தி நாயனாரின் தேவாரத்தில் கொடுப்போர்க்கிலக்காகப் பாடப்பெற்றவன்

காரி:—இவன் பெருங்கொடைவள்ளல், புலவர்க்குப் பரமோபகாரி, அந்தணர்க்குப் பூதானஞ்செய்தோன், பலபுலவர்களாற் பாடப்பட்டவன்.

ஆய்:—இவன் மிகச்சிவபத்தியுடையவன். பாம்புபெற்றுக் கொடுத்த நீலவுடையினைப் பரமசிவனுக்குக்கொடுத்தவன். மோசியார் என்னும் புலவர் இவன் அரண்மனையைச்சுட்டி மிகப்புகழ்ந்து பாடியிருக்கின்றார். இப்புலவர் ஆயைக்காணமுன்பு தாமவனைப்பற்றிக்கொண்ட எண்ணங்கள் அவனைக்கண்டதும் முற்றும் மாறுபட அதற்கிரங்கி

“முன்னுள் ளுவோனைப் பின்னுள்ளினேனே
ஆழ்கென்னுள்ளம் போழ்கென்னாவே,
பாழூர்க்கிணற்றூர்க வென்செவியே”

எனத் தன் அறியாமையை இழிப்பதன்மூலம் ஆயின் குணங்களைப்புகழ்ந்தனர். இன்னும் இப்புலவர் ஆயின் யானைக்கொடையை வியந்து தான் காட்டுவழியே சென்றபோது ஒருபாடலையும் பாடிச்சென்றார்.

அதிகன்:—இவன் பெருங்கொடைவள்ளல். ஔவைக்குத் தான்பெற்ற கருநெல்லிப்பழத்தைக்கொடுத்தவன். ஔவைக்கு நெல்லிப்பழங்கொடுத்த சரித்திரம் பிறிதொருவகையாகவும் சொல்வர். அதுவருமாறு:—காவிரிப்பூம் பட்டினத்தில்வசிக்கும் பந்தன் என்னும் வைசியர் நாகருலகஞ்சென்று பலநாள் ஆதிசேஷனுடன் வசித்து அவன்தந்த (உண்டால் நீடுவாழச்செய்

வதாகிய) கருநெல்லிக்கனி ஒன்றும், போர்த்துக்கொண்டால் இளமைமாருத பீதாம்பரம் ஒன்றும் பெற்று தனதுபட்டணம் வந்திருக்கும்போது ஔவை இவன்மீது அந்தாதியும், நவமணி மாலையும் பாடிவந்தார். பந்தன் அப்பிரபந்தங்களை ஏற்றுப் பீதாம்பரத்தையும் நெல்லிக்கனியையுங்கொடுத்தனன். அது பின்வரும் ஔவையார் பாடல்களால் அறிக.

"இப்பாரி டத்தி லியல்வணிகன் பந்தனைப்போ
லொப்பாரே சொல்லீருலகுதனின்—மெய்ப்புலவீர்
நெல்லிக் கனியளித்த நீள்கவிகைக் கோமானென்
சொல்லுக்கவனே துரை."

"கூடற் றமிழ்ச்சங்கங் கொண்டாடுங் கோவணிகன்
மாடப் புகார்நீடு மாநாகன்—தேடுபுகழ்ப்
பொற்படாமீய்ந்தான் எனக்குப் புகல்பந்தன்
சொற்படா நாவன்றே சொல்.

நள்ளி:—இவன் பெருந்தாதா. இவன் ஒருநாள் காட்டு வழியில் வன்பரணர் என்னும் புலவர்மிடியைப்பார்த்து, அவர்க்குவேண்டிய நல்லுணவுகொடுத்துத் தான் பூண்டிருந்த ஆரத்தினையுங் கடகத்தனையும் ஈய்ந்து தன்பெயர் கூருது சென்றவன்.

ஓரி:—இவன் மிக்க கொடையாளி. பல புலவர்களாற் பாடப்பெற்றவன். இங்கே நாம் கூறியவள்ளல் எழுவரையும் சிறுபாணாற்றுப் படையிலும்; புறநானூறு 158ம் பாடலிலுங்கூறியிருத்தல் காண்க.

குமணன்:—இவன் தமிழ்க்கலை விநோதன். புலவர்களுக்குப் பெரிதும் உபகாரி. பெருஞ்சித்திரனர் என்னும் புலவர் வறுமையால் வருந்தி இவனிடம் பரிசுபெறவிரும்பி அவ்வறுமையின் தன்மைகளைக்காட்டி "வாழுநாளோடியாண்டு" என்னுந் தொடக்கத்தனவாகப் பலபாடல் பாடிவர அவருக்கு யானைமுதலிய பலபரிசுகொடுத்தவன். அப்புலவர் அவன்கொடுத்தபரிசுகளைத் தான் வறுமையடைந்தவராயினும் பொருள் கையில் வந்தவுடன் அதைக்கொண்டுபோய் மனையாளிடங்கொடுத்து அவளுக்குச் சொல்லியபாடலால் அவரும் உலோபமின்றிக் கொடுக்குமியல்பினர் என்று தெரிகின்றது. அப்பாடல் வருவாறு:—

"நின்னயந்துறைநர்க்கும் நீ நயந்துறைநர்க்கும்,
பன்மாண் கற்பினின் கிளைமுதலோர்க்கும்,
கடும்பின் கடும்பசிதீரயாழநின்,
னெடுங்குறியெதிர்ப்பை நல்கியோர்க்கு,
மின்னோர்க்கென்னா தென்னெடுஞ்சூழாது,
வல்லாங்குவாழ்து மென்னாது நீயும்,
எல்லோர்க்குங்கொடு மதிமனை கிழவோயே,
பழந்தூங்கு முதிரத்துக்கிழவன்,
திருந்துவேற் குமணன் நல்கியவளனே."

இவன்தம்பி இளங் குமணன் என்பவன் இவன் நாட்டைக் கவர்ந்துகொண்டு இவனையுங்கொல்லச் சூழ்ச்சிசெய்தான். அஃதறிந்து காடுபற்றியிருக்கையில் பெருந்தலைச்சாத்தனார் இவனிடம் தாம் முன்பெற்ற நன்றியைமறவாதவராய் இவனைக்காட்டிற் சென்றுதேடிக்கண்டு தன் வறுமைநிலையை "ஆடுநனிமறந்தகோடுயரடுப்பில்" என்று தொடங்கிய பாடலினால் அறிவித்தார். அப்பாடலைக்கேட்ட குமணன் மனமுருகி அவர்கையில் வாளைக்கொடுத்து "என்தலையைக்கொய்து சென்றுகொடுப்போர்க்குப் பெருநிதி வழங்குவேனென என்தம்பி முரசறைவித்திருத்தலின் இவ்வாட்படையாலே என்தலையைக் கொய்துசென்று அவன்பாற் கொடுத்து உமதுவறுமையைத் தீர்த்துக் கொள்வீராக என்று "அந்தநாள் வந்திலை" என்னும் முதலையுடையபாடலைக் கூறித் தலையையுங்குனிந்தான். அப்புலவர் இவனுடைய கொடைவீரம் என்னே என்று வியந்து வாட்படையைக்கையிற் பிடித்தபடியேபோய் இளங் குமணனை அடைந்து "மன்னுயுலகத்து மன்னுதல் குறித்தோர்" என்னும் பாடலால் குமணன் வள்ளன்மையும், பெருமையும் எடுத்துப்புகழ்ந்து நன்மதி புகட்டினர்.

இக்குமணனைப் போலவே உயிரைப் பொருட்படுத்தாது கொடையே விசேஷமெனக்கொண்டு யாசிப்போர்க்கு அவர்விரும்பியவற்றை மறுதுகொடுத்தோர் பலருளர். அவருள், கன்னன், இந்திரன் அருச்சுனன்பொருட்டு கிருஷ்ணமூர்த்தியின்ஏவலால் அவனுடன் பிறந்த கவசகுண்டலங்களைப் பிராமணனாகவந்து யாசிக்க, அசரீரியும் சூரியனு முண்மையைக்கூறித் தடுத்துங்

கோளாது இவற்றைக்கொடுத்தால் தன்னுயிரிழக்க நேருமென்பதையும் நோக்காது கொடுத்து அழியாப்புகழ்பெற்றவன். யுத்தகளத்தில் அவசமாந்தருணத்தில் அருச்சுனன் விட்டபாணங்களைத் தருமக்கடவுள் இவன்மேற்படாது செய்ய இதனை அறிந்த கண்ணன் வேதியர்வடிவமாகவந்து இவன்செய்த தருமத்தை யாசிக்க முகமலர்ந்து இன்னுரைகூறித் தன்னுடலில் தைத்திருந்த அம்பின்வழியொழுகிய உதிரத்தை நீர்போற்கொண்டு தத்தஞ்செய்த பெருங்கொடை வள்ளல். இவன் புண்ணியதானஞ் செய்தபோது அப்பிராமணருக்குச் சொல்லியதாக வில்லிபுத்தூராழ்வார் கூறியபாடல் மிக அற்புதமானது. ஆதலால் அதனையிங்கே காட்டுகின்றோம்.

“ஆவியோநிலையிற்கலங்கியதியாக்கையகத்ததோ
புறத்ததோவறியேன்,
டாவியேன்வேண்டும் பொருளெலாம் நல்கும்
பக்குவந்தன்னில் வந்திலையா,
வோவிலாதியான்செய் புண்ணியமனைத்து
முதவினேன் கொள்கமற்றுனக்குப்,
பூவில்வாழயனுநிகரிலை யென்றாற்
புண்ணியமதனிலும் பெரிதோ.”

ததீசிமுனிவர்:—இவர் சிவபத்தர். விஷ்ணுவையும் குபனென்னும் அரசனையும் ஓர்கால் போரில் வென்றவர். ப்ரம்ஹதேஜசோடு க்ஷத்திரியதேஜசும் நிறைந்தவர். அவருடைய முதுகெலும்பை இந்திரன் வந்து யாசிக்க மனமுவந்து கொடுத்துச் சிவலோகம் அடைந்தவர். பலபுராணங்களாலும் புகழப்பெற்றவர்.

சிபிச்சக்கிரவர்த்தி:—இவன் சூரியவம்சத்தரசன். இந்திரன் வேடனாகவும், அக்கினிபுறுவாகவும் உருவெடுத்து புறுவேடனாற்றுரத்தப்பட்டதாகப் பாவித்து இவ்வரசனிடம் அடைக்கலம்புக அதன்பொருட்டுத்தன் சரீரத்துள்ள மாமிசத்தை வேடனுக்குப் புறுவின்நிறையளவு கொடுக்கச்சம்மதித்து அவ்வாறு செய்து நிறைசமப்படாதொழியத் தானே துலைபுக்கவன். “புறவொன்றின்

பொருட்டாகத் தலைபுக்கபெருந்தகை" எனவும், "புறவொன் றின்பொருட்டால் யாக்கை புண்ணுறவரிந்தபுத்தேள்" எனவும் கம்பராமாயணத்திற் புகழப்பெற்றவன்.

சேரசோழபாண்டியர் முதலாகிய முடிமன்னர்கள், குறுநில மன்னர்கள் பிரபுக்களாதியோர் தேவாலயத்திருப்பணிகளுக்கும், அவற்றில் நடக்கும் நித்திய நைமித்திககாமியங்களுக்கும், அவற்றிற்குரிய நிபந்ததிரவியங்களுக்கும், பிராமணர்களுக்கும், தங்கள்மீது பிரபந்தங்கள் பாடிவந்தவடமொழி தென்மொழிவித்துவான்களுக்கும், பற்பல வித்தியாவிற் பன்னர்களுக்கும், அன்னசத்திரங்கள் அக்கிரகாரங்கள், லௌகிக வைதிகசாஸ்திரபாடசாலைகள், தண்ணீர்ப்பந்தர்கள், நந்தவனங்கள், அமைத்தற்கும்; சைவ, ஸ்மார்த்த, வைஷ்ணவ மத்துவாதிமடதருமங்களுக்கும் வேண்டிய திரவியத்தைக் கைமாறு கருதாது கொடுத்தார்கள் என்பதும், விளைநிலம், தோட்டம், ஆபரணம், யானை, குதிரை, சிவிகை முதலியன பரிசளித்தார்கள் என்பதும், புறநானூறு, பத்துப்பாட்டு, சிலபுராணங்கள், பலபிரபந்தங்கள், தனிப்பாடல்கள் சிலாசாசனங்கள், தாமிரசாசனங்கள், கொடைப்பத்திரங்கள், கர்ணபாரம்பரைச்சரித்திரங்கள் முதலியவற்றால் இனிது விளங்கும். இங்கே விரிக்கிற் பெருகும்.

இதுகாறும் ஈகையைச் சுட்டி ஈவோரின் பெருமைகளையும் அவர்களின் சரித்திரங்களிற் சிலவற்றையும் கூறினோம். இனிமேல் ஈயாமையைச் சுட்டி ஈயாதோரின் இழிவுகளையும் அவர்களின சரித்திரங்களிற் சிலவற்றையுங் கூறுகின்றோம்.

உலோபம்:—அஃதாவது தன்னிடத்துள்ள யாதானும் ஒரு பொருளை எக்காரணங்கருதியேனும் பிறருக்கு ஈயாதிருத்தல். ஒருவனிடத்தில் சற்குணங்களெல்லாமிருந்தும் இவ்வுலோபகுணம் மாத்திரம் அவனிடத்துளதாயின் அவ்வுத்தமகுணங்களெல்லாம் அழியுமென்பது நிச்சயம் "உத்தமகுணங்களெல்லா முலோபத்தாலழியுமாபோல்" என்றார் திருவிளையாடற்புராணமுடையார்.

உலோபிக்குச் சமம் ஒருவனுமில்லை அவனுக்கவனே சமமாம்.

"கல்லாலயமாந் தேவருமாங்கழுதை கசடர்பொதிசுமக்கும்
கடாவோவுழுது பயிரிடற்காங்கட்டம் பன்றிக்கிரையாகும்
புல்லேறீசர்வாகனமாம் பொதியுஞ்சுமக்கும் பிணமெனிலோ
பூசிமுடித்துமறையோர்க்குப் பொருளைஈய்ந்து புகழெய்து
மல்லார்குட்டிச்சுவரெனிலோ மாடுமுரைஞ்சு மறைவாகும்
மதியாத்துடைப்பந் தானெனிலோமாட கூடங்களைவிளக்கும்
அல்லாலுலுத்தன் றனக்கிணையாயாரை யுரைப்பேன்புவிமீதி
லவனைக்குறித்துக் கூறுமிடத் தவனுக்கவனேசரிதானே"

எனவும்.

"நெடியதவத்தா லேபெறுமா.னிடத்திற்பிறந்துமறிவின்றி,
நேயர்க்கெனினுந்தமர்க்கெனினு,நெருங்கியிடுக்கணுறும்பொழுதும்
வடியும்மதுரக்கவிபுகலும், வாணர்க்கெனினுந்துன்பகற்ற,
மாட்டாரெச்சிற்கரங்கொண்டு, வருங்காக்கையுமோட்டாரித்,
தடியர்பணங்காத்திடுபூதந், தானேவலதுகுங்குமத்தைத்
தாங்குங்கழுதையோவெதுவோ, சற்றுமறியேமிவர்தம்மைக்,
கொடியநாய்பேய்சவங்கழுகு, கூகையிவற்றுக்கிணையாகக்,
கூறுமெனினுமதுவுமெம்மாற், கூடாதவருக்கவர்சரியே."

எனவும் கூறியவற்றிற் காண்க.

ஈயாத லோபிகளுடைய திரவியம் அழியுமியல்பையும் அதனிழிவையும்.

"நம்பனடியவர்க்கு நல்காத்திரவியங்கள்,
பம்புக்காம் பேய்க்காம் பரத்தைக்காம்—வம்புக்காம்
கொள்ளைக்காங் கள்ளுக்காங் கோவுக்காஞ் சாவுக்காங்
கள்ளர்க்காந் தீக்காகுங்காண்."

எனவும்.

"ஊனமேயெவர்க்குஞ்செய்தே யுறுபொருடேடிநல்ல,
தானமுந்தவமுமின்றித்தான் பொசிப்பதுவு:மின்றி
ஈனமாய்ப்புதைப்போரத்த மெரிமன்னன்சோரன்தோய,
மானநால்வகைக்குமாகி நசித்திடுமெறிவுள்ளோரே."

எனவும்

'பொதுமகளேபோல்வதலையாயார்செல்வங்
குலமகளேயேனையோர்செல்வங்—கலனழிந்த
கைம்மையார்பெண்மைநலம்போற்கடையாயார்
செல்வம்பயன்படுவதில்"

எனவும்.

"வழங்கலுந் துய்த்தலுந் தேற்றுதான்பெற்ற
முழங்குமுரசுடைச்செல்வம்—தளங்கருவி
வேய்முற்றிமுத்துதிரும்வெற்பவஃதன்றே
நாய்பெற்ற தெங்கம்பழம்."

எனவும் வருவனவற்றிற் காண்க.

ஈகையுடையோர்களை வித்துவான்கள் புகழ்ந்ததுபோல ஈயாத லோபிகளை இகழ்ந்து சபித்து மிருக்கின்றார்கள். ஆனால் அவர்களை இகழ்தல் குற்றமாகாதோ என்னில் தொல்காப்பியத்துப்பொருளதிகாரத்தில் "கொடுப்போரேத்திக்கொடார்ப்பழித்தலும்" எனக்கூறுதலால் அது குற்றமாகாது.

"இருடீர் மணிவிளக்கத்தெளிலார்கோவே
குருடேயுமன்று நின்குற்றம்—இருடீர்ந்த
பாட்டுமுரையும் பயிலாதனவிரண்டு
ஓட்டைச் செவியுமுள."

என்றும்.

எதுபுலவீர் விளைவுதழைவிலாக்காலத்தி
லெமதுபேரூர் விசாரித்
திவ்வளவுதொலைவந்த தொல்லையெனவப்பொழு
திரண்டு பதினறுபல்லில்
எவ்வளவுமறையாம லவ்வளவுமேதெரிய
இருகரமு மேந்திவாய்விட்
டின்புறப்புன்சிரிப்புற்றுமது சற்கீர்த்தி
யெல்லாந்தெரிந் துளத்திற்
காதல்வைத்துத் தமிழ்பாடிவந்தோமெனக்
கழறினற்செம் பிருதுலாங்
காச்சியேகாதி விட்டதுபோலுமிம்மொழி
கலக்கமாய்க் கேட்டுமையா.
கவிராஜரே வீட்டிலொருமாதமாக நோய்
கண்டுபெண்பிளை பிழைத்தல்
கடினம்வெகுகடின மதனல்வரும்விருந்துகள்
கணக்கில்லை யிவ்வூரிலோர்
பாதகவைத்தியன் கைத்தாதுபற்றுமுன்
பைத்தாது பற்றியின்னம்
பற்றாதுபற்றுதெனச் சொலியெனடிவயிறு
பற்றநானூறு கொத்துப்

பணையேடெலாம் வாரிவாரிமுன்வாகடப்
பாலினுள வவிழ்தமெல்லாம்
பாவிமகனெழுதி யொருகாசும்வையாமற்
பருங்கரடி யிசல்வளையின்

மோதியேவாய்வைத் துறிஞ்சியதுபோற்றடைய
முழுவது முறிஞ்சிவிட்டான்.
மூத்தகுடியாணமக் கேற்றகுடியலவென்று
முறைமுறையெடுத்துரைக்கும்
முழுமூடராங்கொடிய லோபிகள்மேற்றமிழ்
மொழிர்தவரிடஞ் செலாமல்
முப்பொழுதுபோற்று மெற்கருள்புரிவையெங்குநிறை
முதலான பரமசிவமே.

வெண்பாச்சொல் கவிஞரேவந்ததேதும்மீது
மெய்த்தமிழ்ப் பாடிவந்தோம்
வெகுநேர்த்திமுன்னமே நானூறுகோவையொரு
வித்துவான் பாடிவந்தான்
நண்பாகமனம்வைத்து மூன்றுபடிபெருவரகு
நான்கொடுத்தே னதற்கிந்
நாடெலாந்தெரியுமென் மனையாட்டிமூன்றுதர
நான்றுகொண் டுயிர்பிழைத்தல்.
புண்பாடெலாமறிந்தின்ன நீர் கவிசொலும்
புலவரென் றிங்குவந்திர்
போம்போமெனச்சொலிப் புலையாடுபுலையரொடு
போராடவோ படைத்தாய்
தெண்பாவெனும்பொருட் பாமாலைபூண்டுபத
சேவைதந்தருள் புரிகுவாய்
தேசிகம்பூத்தவுமை நேசபொன்னம்பலவ
தேசிகசிரோ ரத்நமே.

ஆரடிவீதியிலோரேடு கொண்டோடியே
யவசரமதாய் வருகிறீர்
ஐயையோபுலவன்மார் போலவேயிருக்கின்ற
தியாரென்று மெள்ளவெட்டிப்
பாரடிதலைமறைய நின்றுகொண்டவர்நெடும்
பாதைவழி போகிறதுதான்

பரண்மேலெனைத்தூக்கி விட்டுவிடுதாழையடை
பழிகாரி கதவுபோடு
கூர்மைமொழிகேட்டதிக சீக்கிரம்வந்திடுவர்
குதிருக்குள்ளே யொழித்துக்
கொள்ளடியெனப்புகலும் லோபியர்கள்மேற்றமிழ்
கொண்டுபோ யலையாமலே
சீரடிதுதித்துநற் பாமாலைசாற்றியே
தெரிசிக்க முத்திதருவாய். தேசி.........மே.

தலைவாசலின்கதவை யாரடிதிறந்தவர்க
டமிழ்வாணர் வரில்விடுவரோ
தாரமலநீகிரகசாரமோ வட்டமச்
சனியனோ வேதுகுறையோ
அலையாதலைந்துநான் கவிவாணர்தங்களா
லானந்த வருடத்திலே
யான்பட்டபாட்டையோ யாவரறிவாரந்த
வாதிபகவானறிகுவார்
மலையாமனுன்மன மிருப்பதேன்புலவன்மார்
வரிற்சும்மா போவரோதான்
மனம்பதறுதேயெனப் புகல்பவரிடஞ்செலா
மற்காக்கவிது தருணமே
சிலையாருநுதல்விழிக் கௌரிகௌமாரிஜக
தீஸ்வரிவராகி நிமலி. தேசி.........மே.

வந்தவரியாவர்காண் கவிராஜரெந்தவூர்
வடகாசியெங்குவந்தீர்
மகராஜனென்றுனது கீர்த்தியைக்கேட்டுன்மேன்
மதுரகவிபாடிவந்தோஞ்
சந்ததமும்வித்துவானல்ல நீ யென்னுடைய
தாதைமூதாதை வழியில்
தமிழ்கேட்டதியாவர்காண் டலைமுறையிலில்லாத
தாழ்விதைச் செய்துவந்தீர்
இந்தமொழி மற்றுமொருதரநீயுரைக்கிலோ
விரணகளமாகு மப்பால்
எகுமென்றுரைதிடும்புல்லர் தம்பாற்செலா
தெனையாள விது தருணமே

சிந்திக்குமன்பருக்கருண் மழைசொரிந்ததிக
    செல்வங்கொடுக்கு முதலே. தேசி.........மே.

உலகிலெதிர்ப்பட்டவன் நான்முகனேவுங்களுக்
  கொருதொழிற் றூனுமிலையோ
ஒட்டாரங்காட்டியே நித்தநித்தம்வந்
    துபாதிக்கிறீர்களையோ
புலவரென்றுற்றனங் கொட்டிவைத்தீர்களோ
    புதையல்யா னெடுத்ததுண்டோ
புழுசக்கற்றதுபோலொரு தொழில்கற்கொண்ணுதோ
    புகழ்வதாற் பயனேதுகாண்
கலைகற்றவர்களென்னி னெஞ்சமெரிகின்றதே
    கவிராஜரே செல்லுவீர்
காசென்னிடத்திலைசபிக்கி லஞ்சேனெனுங்
    கசடர்மேற் றமிழ்பாடியே
செலும்வழிமறித்தென்னை யாளவிதுதருணமே
    சிற்சபைநடிக்கு முக்கண். தேசி.........மே.

வாரும் நீர் யாரென்ன வித்துவானென்னவும்
    மதிமோசம் வந்ததென்றே
வாய்குளறி மெய்யெலா மிகநடுக்குற்றுநீர்
    வந்தகாரியமேதெனச்
சிருலாவிய காமதேனுவே தாருவே
    சிந்தாமணிக்கு நிகரே
செப்புவசனத் தரிச்சந்திரனே யெனலுஞ்
    சினந்திரு கணுஞ்சிவந்தே.
ஆரை நீ மாடு கல் மரமென்று சொன்னது
    மலாம லரிச்சந்திரனென்றே
அடாதசொற் சொன்னையே யார்க்கடிமையாகினே
    னூர்சையிற் பெண்டுவிற்றேன்
திருமோ வித்தவசை யென்றுரைசெய் வெகுகொடிய
    தியரைப் பாடிநொந்தேன்
திருமன்றுணடுநின்று நடமொன்று புரிகின்ற
    தென்றில்லை நடராஜனே.

என்றார் கூறியிருத்தலே அமையும் சான்று. உலோபிகள் தாங்கள் கொடாதொழிதல் மாத்திரமன்றிக் கொடுப்போரையுந் தடுத்து வித்துவான்களால் பழிக்கப்பட்டிருக்கின்றார்கள். எவ்

வாறெனில். திருவேங்கடம் என்னுங்கொடையாளி ஒரு வித்துவானுக்குப்பரிசுகொடுக்கப்போகுந்தருணத்து அவனைத்தடுத்த அவன் தமையன் கண்ணுக்கினியானை அவ்வித்துவான்

“தேன்பொழிந்தவாயான் திருவேங்கடத்துடனே,
என்பிறந்தான் கண்ணுக்கினியானே—வான்சிறந்த
சீதேவியாருடனேசெய்ய திருப்பாற்கடலில்,
மூதேவி என்பிறந்தாள் முன்.”

என்றிகழ்ந்தார்.

“மாவலியை!மாலுக்குமண்ணுதவா மற்றடுத்த
காவலினுற் சுக்கிரனுங்கண்ணிழந்தான்.”

என்பதனையும்,

“வெள்ளியையாதல் விளம்பினைமேலோர்,
வள்ளியாரக வழங்குவதல்லா,
லெள்ளுவதென்சில வின்னுயிரேனுங்
கொள்ளுதறீது கொடுப்பதுநன்றால்”

என்பதனையும்

“இன்மையாற் சென்றிரந்தார்க்கில்லை
என்னுதீந்துவக்குந் தன்மையார்”

என்பதனையும்

“இரப்பவர்க்கியவைத்தாரீபவர்க்கருளும்வைத்தார்
கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள்வைத்தார்”

என்பதனையும்.

“அட்டுண்பாரிட்டுண்பார் விலக்காரையம்” என்பதனையும் கொடுக்கும்பொழுது “கொடுக்கவேண்டாமென்று யார் விலக்குகின்றனோஅவன் நூறுதரம் பசு முதலிய விழிந்தயோநிகளிற் பிறந்து பின்பு நீசனுகப்பிறக்கிறன் ”(ஸ்மிருதி) என்பதனையும் நோக்குக.

கொடையாளர் உயிர்விட்டிறந்தாராயினும் நல்லிசைபெற்றூராதலின் உயிரோடு வாழ்வோராவர். கொடாதோர் உயிரோடிருந்தாராயினும் நல்லிசைபெருமையின் உயிர்விட்டிறந்தோராவர் என்பதனை

"மாய்ந்தவர்மாய்ந்தவரல்லர் கண்மாயா,
தேந்திய கையொடிரந்தவரெந்தாய்,
வீய்ந்தவரென்பவர் வீய்ந்தவரேனு,
மீய்ந்தவரல்ல திருந்தவர்யாரே."

என்னும் செய்யுள் இனிது நிறுத்தும். வித்துவான்கள் உலோபிகளைச் சபித்தமை.

"ஒருகாவித்தண்டலம் வாழோமளநாதன்வீ,
டிருகாலும் பற்றியெரிக—அருகாருங்,
கம்பத்தான்விடுங்கலந்தெரிக மற்றிவர்கள்,
சம்பத்தெல்லா மொழியத்தான்"

என்பதிற்காண்க. உலோபிகளைக்கொல்லவேண்டுமாயின் இலேசானவழி ஒன்றுண்டு என்னை எனில்,

"கொடைமறுத்தலோபிதனைக்கொல்லவிடம்வேண்டா
மிடமடுத்தோன்றிவாயென்று—மடவனமே
கேட்கினதேபோதுங் கிலிகொண்டுயிர்விடுமால்
வாட்படை பாய்ந்தென்னமதி"

என்பதேயாம். இவ்வுலோபிகளைச்சுட்டிச்சிலவேடிக்கைக்கதைகளைச்சொல்லுகின்றோம். 1. சங்கிதவித்துவானுக்குச் சத்தத்தால்பரிசுகள்கொடுத்த உலோபி. 2. ஈகாரஉலோபி. 3. புளியம்விரை புதைத்தலோபி. 4. அறுகம்புல்லால் நெய்பரிமாறிய உலோபி. 5. துறப்புவிழுங்கிய உலோபி. 6. சுண்ணும்புக்குக் காலணுக்கொடுத்த உலோபி. 7. சுவாமிக்கு நேர்ந்த உலோபி. 8. மிளகு சிரகக்கை உலோபி. 9. விளக்கணைத்த உலோபி. 10. நோட்டுவெட்ட உலோபி. 11. கைகால்காட்டின உலோபி. 12. லோபி, பரமலோபி, மகாலோபி. 13. எலும்பைக்காட்டிய உலோபி, 14. செலவுசுருக்கும் வகைசொன்ன உலோபி, 15. தேங்காய் பற்றுவரவு உலோபி, 16. யமன் ஊருக்கனுப்பின உலோபி, 17. ஜோசியனின் சீட்டுக்கிழித்த உலோபி, நானென்று கேட்கிறேனென்ற உலோபி, 18. சாகும்போது மகனுக்கு உலோபம்பழக்கிய உலோபி, 19. கோதானம் பண்ணும்போது கோபித்த உலோபி, 20. கடவுளிடத்தில் இரந்த உலோபி. (இந்தக்கதைகள் எந்த நூலிற் சொல்லியிருக்கின்றனவென்று கேட்

க்வேண்டாம் இவைகள் கர்ணபரம்பரையிலுள்ளன). உலோபிகள் ஈயாது பொருளை வைத்திருப்பினும் இன்பமெய்தாது துன்பத்தையே யனுபவிப்பர்.

"முறைதவிர்கொடுங்கோன்மன்னர் முனிவிற்குநனியுமச்சம்,
கறைகெழுகரவுசெய்வார் காத்திற்குமழற்குமச்சம்,
மறைவறுதாயமாக்கள் வவ்வுவரென்றுமச்சம்,
அறைபொருள்பெற்றாரல்ல ரச்சமேபெற்றார்போலும்."

என்பதிற் காண்க.

இவ்வுலோபிகளிடத்திலே சில வித்துவான்கள் பரிசுபெறப் போய்ப்பெறாது மனம்வருந்தி தங்களையே நொந்துகொண்டுபோனவர் பலர். அக்காலத்து அவர் சொல்லிய பாடல்களிற் சில வருமாறு.

வணக்கம்வருஞ்சிலநேரங் குமரகண்ட
வலிப்புவருஞ்சிலநேரம் வலியச்செய்யக்
கணக்குவருஞ்சிலநேரம் வேட்டைநாய்போற்
கடிக்கவருஞ்சிலநேரங் கயவர்க்கெல்லாம்
இணக்கம்வரும்படி தமிழைப்பாடிப்பாடி
யெத்தனைநாட்டிரிந்துதிரிந் திளைப்பேனையா
குணக்கடலேயருட்கடலே யசுரரான
குரைகடலைவென்ற பரங்குன்றுளானே.

கல்லாதவொருவனை நான் கற்றாயென்றேன்
காடெறியுமவனை நாடாள்வாயென்றேன்
பொல்லாவொருவனை நல்லாயென்றேன்
போர்முகத்தையறி யானைப்புலியேறென்றேன்
மல்லாரும்புயமென்றேன் சூம்பற்றோளை
வழங்காதகையனை நான் வள்ளலென்றேன்
இல்லாதுசொன்னே னுக்கில்லையென்றான்
யானுமென் றன்குற்றத்தாலேகின்றேனே.

அடகெடுவாய்பல தொழிலுமிருக்கக்கல்வி
அதிகமென்றேகற்று விட்டோமறிவில்லாமல்
திடமுளமோகனமாடக் கழைக்கூத்தாடச்
செப்படிவித்தைகளாடத் தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப் பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத் தையலார்தம்

மிடங்கிருந்துநாடுசென்று பிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகி லிரக்கின்றேமே.

சந்தப்பா விருத்தப்பா கலிப்பா வெண்பா
தாழிசைப்பா கொச்சகப்பா தனிப்பாவுக்கும்
விந்தைப்பாவாகிய கிரந்தப்பாவும்
வெல்லப்பாவதுபோல விகடப்பாவும்
எந்தப்பாவுரைத்திடினு மொருபேறில்லா
எதப்பாவிக்குநின திணைப்பாதத்தைக்
கந்தப்பா முருகப்பா போரிவாழ்வே
கையப்பா மெய்யப்பா காட்டப்பாவே.

கல்லைத்தான் மண்ணைத்தான் காச்சித்தான்
குடிக்கத்தான் கற்பித்தானே
இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான்
கொடுத்துத்தா னிரட்சித்தானே
அல்லைத்தான் சொல்லித்தானுரைத்தா
னேவத்தானையோவெங்கும்
பல்லைத்தான் றிறக்கத்தான் பதுமத்தான்
புவியிற்றான் பண்ணினனே.

பல்லெலாந்தெரியக்காட்டிப்
பருவான் முகத்திற்கூட்டிச்
சொல்லெலாஞ் சொல்லிநாட்டித்
துணைக்கரம்விரித்து நீட்டி
மல்லெல்லாம கலவோட்டி
மானமென்பதனைவீட்டி
இல்லெலாமிரத்தலந்தோ
விழிவிழிவெந்தனூன்றும்.

புடவிக்கயவர்தமைப் பாடிப்பரிசுபெறுமற் றிரும்பிப்போம்புலவர்மனதிற்குவமைசொலில் வடவைக்கனலைப்பிழிந்துகொண்டு மற்றுமொருகால்வடித்தெடுத்துவாடைத்துருத்தி வைத்தூதிமறுகக்காய்ச்சிக் குழம்புசெய்த சுடுநெருப்பே உவமையாம். உலோபிகளின் பிறப்பைச்சுட்டி

"மண்ணூர்சட்டி காத்தேந்தி மரநாய்கவ்வுங்காலினரா,
யண்ணூந்தோடி யிரப்பாரை யறிந்தோமறிந்தோமம்மமா,

பண்ணார்மொழியார் பாலடிசில் பைம்பொற்கலத்திற்பரிந்தூட்ட
உண்ணாநின்றேயொருவற்குமுதவா மாந்தரிவர்தானே.''

எனவும்

"மாசித்திங்கண் மாசின்னத்துணிமுள்ளி,
னூசித்துன்ன மூசியவாடையுடையாகப்
பேசிப்பாவாய் பிச்சையெனக்கையகலேந்திக்
கூசிக்கூசிநிற்பர் கொடுத்துண்டறியாதார்''

எனவும் கூறியசெய்யுட்களால் அறிக. "முன்னையபிறப்பில் இல்லையென்று ஒருவன் பழகியசொல்லானது மறுபிறப்பில் அவனைக்கொடுவென்னுஞ் சொல்லாக வேறுவிதத்தால் உருவப்பட்டுப் பற்றிக்கொள்கின்றது" என்று ஸ்மிருதியும் கூறிற்று. ஏற்கு மட்கலத்திற்குப் பெயர்கூறப்புகுந்த நிகண்டுநூலார்" திருவறஞ் செய்யாரேற்கும் என அடைமொழிபுணர்த்தியதையும் நோக்குக.

நாம் இங்கேகூறிய கொடைகள் எல்லாவற்றிலும் கோடா கோடி பங்கு விசேஷமுடைய கொடை ஒன்றிருக்கின்றது. அதற்கு ஒப்பதுமில்லை மிக்கதுமில்லை. தேவன், தானம், பிரபு, ராஜா, வீரன் என்பனவற்றில் உயர்வைக்காட்டுதற்கு மஹா என்னும் அடைமொழிசேர்த்து மஹாதேவன், மஹாதானம், மஹாப்ரபு, மஹாராஜா, மஹாவீரன் என்று சொல்வது வழக்கம். அதுபோல நான் சொல்லப்போகுந் தானத்துக்கு கோடி மஹாமஹா அநந்தகோடி மஹாமஹா சொன்னாலும் போதாது. இத்தானஞ்செய்தற்கு ஒருதுட்டேனுஞ்செலவில்லை. புண்ணியதேசகாலங்கள் வேண்டியதில்லை. இத்தானபாத்திரத்தின் குணாகுணங்கள் பார்க்கவேண்டியதில்லை. மற்றெல்லாக்கொடைகளும் கொடுத்துமுடிந்தால் அதைச் சுட்டிக்கொடுத்தவன் சிந்திக்கவேண்டியதில்லை. இப்போது நான் சொல்லப்போகுந்தானம் ஒருவருக்குக்கொடுத்தால் கொடுத்தநாள்முதல் தன்னாயுசு அவராயுசுவரைக்கும் அதனைச் சிந்தித்துக்காத்தல்வேண்டும். அப்படிக்காத்தலால் எத்தனைகோடி வாஜபேயசோமயாக அசுவமேதாதியாகங்கள்செய்த பலனுண்டாம். காக்கத்தவறினாலோ கழுவாயில்லாத உய்தியில் குற்றமேயாம். அத்தானம் எல்லாருங்கொடுக்கக்கூடியதுதான். ஒருகால் அத்தானத்தைக்காக்கக் கொடுத்தவன் உயிர்விட்டிறக்கவேண்டிவரினும் வரும். வரின் இறக்கத்தான்வேண்டும். ஆனால் அக்கொடை யாதெனில் அபய தானமேயாம். இத்தானத்தை யாசித்தோர்க்குக் கொடுத்தோர் மிகச்சிலராம். அவருள் ஸ்ரீ இராமசாமியேசிறந்தவராம். அபயதா

னச்சிறப்பைச்சுட்டி அவர் கூறியகருத்துக்களைக் கம்பர் விபீஷணனடைக்கலப்படல 108ம் பாட்டுமுதல் 120ம் பாடல்வரையும் விரித்துக் காட்டியிருக்கின்றார். கும்பகருணன் வதைப்படலம் 132ம் பாடலினும்; வேலேற்றுப்படலம் 30ம் செய்யுளினும், 48ம் செய்யுளினும் சிறிது காணலாம். நிற்க.

இன்னுமொன்றுசொல்லி எனது பிரசங்கத்தை முடிக்கின்றேன். தொண்டைமண்டலத்திலே காஞ்சிபுரத்திலே உலோகாணித்தீர்த்தத்தின்கரை அருகிலே காமக்கோட்டமென்னும் ஆலயத்திலே காயத்திரி மண்டபத்திலே சிதாகாசபிலத்திலே கோயில்கொண்டெழுந்தருளி இருக்கும் உலகமாதாவாகிய காமாக்ஷி அம்மையார் ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அனாதமகவு வளர்த்தல், தண்ணீர்ப்பந்தர், மடம், தடம், விலைகொடுத்துயிர் காத்தல், மகாதாகம் முதலிய பல அறங்கள் செய்தமை தம்பொருட்டா? இல்லையே. ஆட்டுவிப்பான் தன் மாணாக்கர்களுக்கு அவ்வாடல் புலப்படும்பொருட்டு முன்னர்த் தானாடிக்காட்டிப் பின்னர்த் தன் மாணாக்கர்களையுமவ்வாறு ஆடும்படிபணிக்குமாறுபோல தர்மஸம்வர்த்தநீ (அறம்வளர்த்த நாயகி) யாகிய நம தன்னையார் முன் இவ்வறங்களைத் தாம்செய்துகாட்டி நாம் இவ்வாறுசெய்யும்படி நம் பொருட்டுச்செய்த பெருங்கருணைத் திறமேயாம். ஆதலால் நாமெல்லோரும் "தருமந் தலைகாக்கும்" "அறஞ்செய விரும்பு" "தானமது விரும்பு" "இட்டார்பெரியோரிடாதா ரிழிகுலத்தோர்" தருமத்தைச்செய்" "தருமமே எல்லார்க்கு மினியது" "கொடையினுயர்ந்தது பிறிதொன்றில்லை" என்பனவாதிய பெரியோர் உபதேசங்களை உறுதியெனக் கொண்டு இயன்ற இயன்ற அளவு இயல்வது கரவாது கொடுத்துவரக்கடவேம். அவ்வாறு நமது சாஸ்திரங்களினால் மிகப்புகழ்ந்து கூறப்பட்டதும் நம்முன்னோரால் இனிது அநுட்டித்துவந்ததுமாகிய கொடை என்னுந் தருமத்தைக் கடைப்பிடித்து வருவோமானால் மிக்க புகழும் புண்ணியமும் அடைவேம்; இவ்வாறாகும்படி எல்லாவறிவும் எல்லாமுதன்மையும் எல்லாவநுக்கிரகமுமுடைய பெருங்கருணைத்தடங்கடலாகிய குஹப்பெருமான் திருவருள் பாலித்தருளும்படி பிரார்த்திக்கின்றேன்.

"பாம்பழல்வாயினுற் பற்றமண்டுகேர்
தேம்பிடேர்துயர்செயுஞ் சிவன்றேயுநா
னோம்பிடவல்லரோ வுற்றமற்றையோர்
போம்பொழுதருந்துணை புரிந்தபுண்ணியம்."

---

உ

சிவமயம்.

## அக்கிராசனாதிபதியவர்கள்

# குறிப்புரை.

---

மாந்தர் அடைதற்குரிய புருடார்த்தங்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இவற்றுள் அறத்தினைத் துணைக்கொண்ட ஏனைய மூன்றும் ஈட்டப்படத்தக்கனவாதலின், அவ்வறம் முதற்கண் வைக்கப்பட்டது. இந்த அறத்தினது அருமையை நோக்கியே உலகன்னையாகிய உமாதேவியார் "அறப்பெருஞ்செல்வி" எனப்பட்டார்.

இந்த அறமாவதுதான் யாது என்று ஆராயுமிடத்து, அது "ஈகை" என்னும் இரண்டெழுத்துச் சொல்லால் எடுத்து விளக்கப்படுதற்குரியதாய் நிற்கின்றது. ஆனதுபற்றியே "ஈதலறம்" என்றார் முதுமொழிச் செல்வியாகிய ஔவைப்பிராட்டியார்.

அறத்தினுக்கு ஆதாரமாயுள்ளது சீவதயையேயாதலாலும், இந்தச் சீவதயையைப் பரிபாலிக்கும் உபாயம் ஈகையேயாதலாலும், இந்த ஈகை பொருளீகைமாத்திரத்தின் அமையாது எவ்வெவரும் தத்தமக்கு இயன்றவாறு செய்யும் செயலீகை சொல்லீகை, கருத்தீகை முதலிய பலவகை ஈகைகளை அடக்கி நிற்றலானும், அறம் தனக்கு முக்கியாங்கமாயுள்ள "ஈகை என்னும் பெயரால் அமைக்கப்படுவதாயிற்று. இந்த ஈகையின் சிறப்பு நோக்கியே பரம கருணாநிதியாகிய சிவபெருமானும் வேண்டுவார் வேண்டுவதையீயும் வள்ளல் என்னும் காரணப்பெயரைத் தரித்தருளினார்.

இந்த "ஈகை" எனப்படுவதாகிய அறம் இந்துக்களாகிய நம்மவருள்ளே முற்காலத்திலே பெரிது பரிபாலிக்கப்பட்டு வந்

தது. அவ்வாறு பரிபாலிக்கப்பட்டுவந்தமைக்குச் சிறந்த சான்
றாக, அறத்தினை நம்முன்னோர் முப்பத்திரண்டு வகையின்
வைத்து விளக்கியுள்ளார். உலகத்திலேயுள்ள எந்தச் சா
தியாராவது அறநெறியைக் குறித்து இத்துணைச் சிரத்தை
எடுத்தார்கள் என்று நாம் சொல்லத் தக்கதாயில்லை. அ
றத்துப்பாலை எடுத்துப் பிரதிபாதிக்கும் சாத்திரங்கள் ஆரிய
த்தினும் தமிழினும் அளவிறந்தன உண்டு. ஆரியத்திலுள்ள
ஸ்மிருதிகளும், புராணங்களும், இதிகாசங்களும், நீதிசாரம்மு
தலிய பிறநூல்களும், தமிழிலுள்ள திருக்குறள், இன்னாநாற்ப
து, இனியவை நாற்பது, ஆசாரக்கோவை, பழமொழி, திரிகடு
கம், நாலடியார், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டா
ம், நல்வழி, நன்னெறி முதலிய பலபல சாத்திரங்களும் ஆரிய
ரும் தமிழரும் அறத்தின்கண் எத்துணைக் கருத்தும் காதலுமு
டையராய் ஒழுகினர் என்பதற்குப் பிரபல சாக்ஷியங்களாகும.
அதுமட்டோ! நமது பரதகண்டத்தின்கண்ணே எந்தெந்தத்தி
சையினும் காலந்தோறும் அமைக்கப்பட்டனவும், அமைக்கப்
பட்டவாறே இன்றுகாறும் நின்றுநிலவுவனவாகிய ஆதுலர்சா
லைகளும் அன்னசத்திரங்களும் தேவாலயங்களும் மடாலயங்க
ளும் இவ்வுண்மையைப் பெரிது வலியுறுத்தும். அறநிலைக்குரி
ய வச்சிரத் தம்பங்களாகிய இந்தச் சாதனங்கள் உலகத்தின்க
ணுள்ள பிறதேசங்களிலே மிகச்சிலவன்றி இலவாம்.

நம்முன்னோரால் இவ்வாறு பெரிது பாலிக்கப்பட்டுவந்த
அறநெறி இப்போது உண்டோ இல்லையோ என்று ஐயுறத்தக்க
அவ்வளவாக அருகிவிட்டது. இவ்வாறு அறநெறி குறைவுற்
றமைதானே நமது தேசமும் நமது சாதியும் இப்போதுள்ள
நிலைமை அடைந்தமைக்கு முக்கிய காரணமெனலாம். இந்தக்
காலத்திலே சுவநயமன்றிப் பிறர்நயங் கருதுவாரைக் காண்பது
மிக அரிதென்றே சொல்லத்தக்கது. ஆனாலும் ஏனைத்தேசங்க
ளோடு ஒப்ப நோக்குங்கால் நமது தேசம் இப்போதுதானும்
அறநெறியை மறந்துவிட்டது என்று சொல்வதுகூடாது. இர
ப்போர்க்கிடலும் ஏழைகட்கு இரங்குதலுமுதலிய தருமங்கள்
எங்கள் சாதியார்க்குள்ள குலதருமமாதலின், பாசகங் கருதிச்

செல்வார்க்கு இல்லையென்னது கொடுக்கும் உதாரகுணத்தை நாம் எங்கெந்த வீட்டிலும் நாள்தோறும் காணத்தக்கதாக இருக்கின்றது. ஆனல் பண்டைக்காலங்களிலே பொதுநயங்கருதிச் செய்யப்பட்டுவந்த பெருந்தருமங்கள் இப்போது அருகிவருகுதலை நோக்குமிடத்து, அது எங்கள் சமயநிலைக்கும் சாதி ஆசாரத்துக்கும் பெருங்குறைவென்றே சொல்லத்தக்கது.

இந்தத் தருமநெறியைக் குறித்து நமது தேசத்தார் எல்லாரையும் இந்தக்காலத்திலே அருட்டிவிடவேண்டியது அவசியமாதலால், இந்த விஷயத்தைச் சாத்திரோக்தமாக எடுத்து விளக்கி, கற்ருேரும் மற்ருேருமாகிய எல்லோரும் இதன் மகத்துவத்தைத் தெள்ளிதின் விளங்கிக்கொள்ளுமாறு இலங்கை இந்தியா சிங்கப்பூர் முதலிய தேசங்கள்தோறும் சென்று நவரசஞ்செறிந்து அதிரசங்கலந்த தமது பிரசங்கங்களாற் சைவப் பயிரை வளர்த்து, அப்பிரசங்க சாதுரியத்துக்கோர் குறியீடாகப் பலப்பல விருதுமுத்திரைகளைப் பெற்று விளங்குபவராகிய உபய வேதாகமபண்டிதர் நல்லூர் பிரம்மஸ்ரீ. வே. கனகசபாபதிஐயரவர்கள் எழுதிப் படித்த இவ்வியாசம் பெரிதும் பாராட்டத்தக்கதென்பதை நாம் சொல்லிக்காட்டவேண்டியதில்லை.

அவர்கள் ஈகையின் பெருமையினை உடம்பாட்டு முகத்தானன்றி எதிர்மறை முகத்தானும் காட்டும்பொருட்டு அவ்வீகைக்கு எதிர்மறையாயுள்ள உலோபகுணத்தை ஆசியரசச்சுவை செறிந்த பல செய்யுள்களை ஆதாரமாகக்கொண்டு எடுத்து விளக்கியிருப்பது பெரிதும் வியக்கத்தக்கதாம். இந்த ஈகையைச் சிலர் இடாம்பிகத்தின் பொருட்டாக எடுத்தாண்டுவருவதையும் அவ்வாறு எடுத்தாளுவதால் தருமத்தின் அருமையினை அபாவனைபண்ணுவதையும் ஐயரவர்கள் ஒருசிறிது விளக்கிக்காட்டுவார்களாயின், அது பலர்க்கும் பெரும் பிரயோசனமுடைத்தாகும். அத்தோடு பொருளீட்டும் நோக்கம்பற்றிப் பிரபந்தங்கள் பாடும் புலவர்களையும் சிறிது கண்டிப்பதுண்டெனில், அதுபின்னும் நன்மையுடைத்தாகும்.

தான் மிக சாத்திரத்தை நூற்கிரமத்தின் வைத்து விளக்கும் தமிழ்க்கத்தியரூபபிரபந்தங்கள் மிக அரியனவாதலால், இந்தவிஷயத்தை இன்னும் சிறிது விரித்து எழுதி ஸ்ரீமத். பண்டிதரவர்கள் வெளிப்படுத்துவாராயின், அது தமிழுலகத்துக்குப் பெரும் பேறாகும்.

